23rd August 1960

SRI N. MAHALINGAM : Sir, are the Government aware that in the Nilgiris Hills, there are iron ores with 60 per cent iron content available and if so, what steps the Government have taken to investigate the quantity of iron ore available there?

THE HON. SRI R. VENKATARAMAN : The State Geological authority is already investigating it.

*Roads for Polur taluk*

* 415 Q.—SRI S. M. ANNAMALAI : *கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—*

*(அ) 1959-60-ல் பஞ்ச நிவாரண வேலையின் மூலம் வட ஆற்காடு மாவட்டம் போளூர் தாலுக்காவில் போடப்பட்ட பாதைகள் எத்தனை ?*

*(ஆ) இதில் போளூர், கடலாடி, சந்தவாசல் பிர்க்காக்களில் போடப்பட்ட பாதைகள் எத்தனை ?*

*(இ) இல்லையாயின் காரணமென்ன ?*

*(ஈ) 1960-61-ல் எத்தனை பாதைகள் போட உத்தேசம் ?*

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) 14.

(*b*) Nil, Sir.

(*c*) In North Arcot district adverse seasonal conditions prevailed during the year 1959–60 in the areas in Kilpennathur and Thurinjapuram firkas in Thurinjapuram block in Tiruvannamalai taluk and in Mandakolathur and Thatchambadi firkas in Chetpet block in Polur taluk only. Hence no road works under Low Scale Famine relief works have been sanctioned in other parts of the district.

(*d*) The Collector has submitted proposals for four road works in Polur taluk and they are under the consideration of the Government.

SRI S. M. ANNAMALAI : *போளூர் தாலுக்காவில் ஒரு பகுதியில் பஞ்ச நிவாரண வேலை நடந்தது. ஒரு பகுதியில் பஞ்சம் இருக்கிறது, இன்னொரு பகுதியில் அப்படிப்பட்ட நிலை இல்லை என்றால், ஒரு பகுதியில் மழை பெய்தது, இன்னொரு பகுதியில் பெய்யவில்லை என்றால் மழை பிரித்துப் பெய்வதா ? திராவிட முன்னேற்றக் கழக உறுப்பினர் எந்தயிடத்திலிருந்து ஜெயித்து வந்திருக்கிறார்களோ அந்தயிடத்தில் மழை பெய்யாமல் மற்ற பகுதிகளில் மழை பெய்தது என்றிருப்பது குறித்து சர்க்கார் அதைப் பரிசீலனை செய்தார்களா ?*

THE HON. SRI M. A. MANICKAVELU : *இந்தக் காலத்தில், மைலாப்பூரில் மழை பெய்தால் இங்கு இல்லை. போளூர் தாலுகா பெரிய தாலுகா. கலெக்டர் ரிப்போர்ட்டின் பேரில் செய்யப் பட்டிருக்கிறது.*

'The Collector of North Arcot reported that adverse seasonal conditions prevailed in the taluks of Polur and Tiruvannamalai and requested that relief works might be sanctioned in Kilpannathur and Thurinjapuram firkas in Thurinjapuram block in Tiruvannamalai taluk and Mandakolathur and Thatchambadi firkas in Chetpet block in Polur taluk . . .'

3, 4 பிர்க்காக்களைத்தான் குறிப்பிட்டிருக்கிறார்கள். மற்றயிடங்களில் மழை பெய்திருந்தாலும் அங்கு அதிகப்படி பாதகம் ஏற்படவில்லை என்பதுதான் அர்த்தம்.

SRI P. U. SHANMUGAM : திருவண்ணாமலையில், கீழ்பெண்ணாத்தூர் வட்டாரத்தில் மழையின்றி பஞ்சம் ஏற்பட்டிருந்து, அங்கு பஞ்ச நிவாரண வேலைகள் தொடங்கப்பட வேண்டுமென்று கலெக்டர் எழுதியிருப்பதாக அமைச்சர் அவர்கள் படித்தார்கள். ஆனால் அங்கு அதற்காக ஒரு சல்லிகூட செலவழிக்கப்படவில்லை என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா? பல முறை வற்புறுத்தியும்கூட, அமைச்சர்கள் வெற்றி பெற்ற இடத்தில், அந்தப் பகுதிகளில் செலவு செய்தார்களே தவிர திராவிட முன்னேற்றக் கழக உறுப்பினர் வெற்றி பெற்ற பகுதிகளில் ஒன்றுமே செய்யப்படவில்லை என்பதை சர்க்கார் ஒப்புக்கொள்கிறார்களா?

THE HON. SRI M. A. MANICKAVELU : எந்த நோக்கத்தோடு பார்க்கிறார்களோ அதன் பிரகாரம்தான் தெரியும். கீழ்பெண்ணாத்தூர் பற்றியும் லிஸ்டில் இருக்கிறது. கனம் அங்கத்தினர் வந்தால் அதைப் படித்துக் காட்டுகிறேன்.

SRI P. U. SHANMUGAM : செலவு செய்த தொகை எவ்வளவு?

THE HON. SRI M. A. MANICKAVELU : 1½ லட்சம் சாங்ஷனாகியிருக்கிறது. மற்றது தேடிப் பார்த்துத்தான் சொல்லவேண்டும்.

SRI S. M. ANNAMALAI : சென்ற வருடத்தில் சட்ட மன்றத்தின் முன்னால் நானே அவசரத் தீர்மானம் கொண்டு வந்தேன், மழையில்லாமல் இருக்கிறதென்று. அப்படி ஒன்றும் அங்கு பஞ்சம் இல்லையென்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். பாதயாத்திரை வந்து பாருங்கள் என்று சொன்னேன். அமைச்சர் அவர்கள் பாத யாத்திரை வந்து பார்த்தார்கள். அப்படிப் பார்த்தபோது, போளூர் தாலுகா பூராவும் மழை பெய்யாமல் இருந்ததா? அல்லது அவர்கள் தொகுதியில் மட்டும் பெய்யாமலிருந்ததா? அப்பொழுது கலெக்டர் அவர்களிடம் சொன்னார்கள், இதை சரிவர பரிசீலனை செய்யுங்கள் என்று. இருந்தும், கலெக்டர் சரிவர பரிசீலனை செய்யாமல் பார்ஷியலாக நடந்து கொண்டார்கள். காரணம் என்ன?

THE HON. SRI M. A. MANICKAVELU : பரிசீலனை செய்து நான்கு இடங்களில் ரோடு போடவேண்டுமென்று கூறப்பட்டது. அந்த நான்கு ரோடுகளும் கனம் அங்கத்தினர் அவர்கள் சொல்லிய இடத்தில் இருக்கின்றன.

23rd August 1960]

**MR. SPEAKER:** கேள்வி நேரத்தை சீக்கிரமாக முடிக்க ஒத்துழைத்ததற்கு என் நன்றி. ஏன் அப்படி சீக்கிரம் முடித்தார்கள் என்பது இப்பொழுது உங்களுக்குத் தெரியும்.

## UNSTARRED QUESTIONS

*Handloom co-operative societies*

12 *Q.*— SRI V. K. KOTHANDARAMAN: கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதில் அளிப்பாரா—

(அ) நமது ராஜ்யத்தில் கைத்தறி கூட்டுறவு சங்கங்கள் எத்தனை ?

(ஆ) அவைகளில் (போகஸ்) தவறுகள் செய்தவைகள் என்று நடவடிக்கை எடுக்கப்பட்டவை அல்லது நடவடிக்கையில் உள்ளவைகள் எத்தனை ?

(இ) எத்தனை சங்கங்களுக்கு, தவறுதலின் காரணமாக ரிபேட் கொடுக்காமல் நிறுத்தப்பட்டுள்ளது ? (ஜில்லா வாரியாக.)

*A.*—(அ) 990.

(ஆ) 90.

| | | |
|---|---|---|
| (இ) North Arcot district .. .. .. .. | 6 | societies. |
| Tirunelveli district .. .. .. .. | 5 | ,, |
| Coimbatore district .. .. .. .. | 2 | ,, |
| Madurai district .. .. .. .. .. | 2 | ,, |
| Salem district .. .. .. .. .. | 3 | ,, |
| Kanyakumari district .. .. .. .. | 7 | ,, |
| South Arcot district .. .. .. .. | 5 | ,, |
| Tiruchirappalli district .. .. .. .. | 4 | ,, |
| Madras district .. .. .. .. .. | 3 | ,, |
| Chingleput district .. .. .. .. | 2 | ,, |
| Ramanathapuram district .. .. .. | 51 | ,, |
| Total .. | 90 | |

*Corruption cases in co-operative societies*

13 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN: கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்கு பதிலளிப்பாரா—

நமது ராஜ்யத்தில் கூட்டுறவு சங்கங்களில் ஏற்பட்ட ஊழலின் காரணமாக, எத்தனை அதிகாரிகள், சிப்பந்திகள் பேரில் நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது ? (1957 முதல் 1959 வரை.)

*A.*—The particulars are furnished in the statement below:—

| *Year.* | *Number of Gazetted Officers.* | *Number of subordinates.* |
|---|---|---|
| 1957–58 .. .. .. | Nil | 2 |
| 1958–59 .. .. .. | Nil | 6 |